உ
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.
வெற்றிவேலுற்ற துணை.

(9639)

திருச்செந்தூர் சண்முகக் கடவுள்மீது

# மாசிலாமணி மாலை.

கந்தர் பதிகம், போற்றிமாலை.

—:o:—

இவை
சிவஞானபுரம் மகா-ள-ள-ஸ்ரீ
இலக்கணமுத்துக் கவிராஜபண்டிதரவர்களின்
மாணாக்கரும்
ஆத்தக்குடி
சற்சனசபையின் உப அக்கிராசனாதிபதியுமாகிய
ஒட்டநத்தம் மகா-ள-ள-ஸ்ரீ கவிராஜபண்டிதர்
செகவீரபாண்டிய நாயக்கர்
அவர்களா லியற்றப்பெற்று

---

இளவேலங்கால் ஞானப்பிரகாச
சைவ சபையாரால்
மதுரை விவேகபாநு அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.
1912.

247

# சாற்றுக்கவிகள்.

இந்நூலாசிரியரின் ஆசிரியர் சிவஞானபுரம்

## ஸ்ரீமாந் இலக்கணமுத்துக்கவிராஜ பண்டிதர்

அவர்கள் இயற்றிய

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மாசிலா மணிமாலை யுடற்றுரைக் காமலையுண் மதிக்குமாடோன், மாசிலா மணிமாலை மதிகண்ட கடலின்வர வருசூர் வென்ற, மாசிலா மணிமாலை யணிந்தணிசேய்க் கின்றமிழ்ச்சொன் மலரான் வாய்ந்த, மாசிலா மணிமாலை செயவீர பாண்டிய பவேள் வனைந்தா னம்மா. (1)

பேசிலா மணிமாலைக் குரமருண்மான் மகன்மகவான் பெரிதும் வேண்ட, வாசிலா மணிமாலை யசுரருபி ரயிலயில்வேலமலத் தேற்ற, காசிலா மணிமாலை யிதுவேயென் றறிஞர்கொளக் கழறி னோர், மாசிலா மணிமாலை செகவீர பாண்டியநா வலவன் மாதோ. (2)

கூத்திபாறை என்னும் நல்லூர் விஸ்வஜந்

மகா-ள-ள-ஸ்ரீ ச. முத்துக்கிருஷ்ண மதுரகவி தமிழ்ப்

பண்டிதரவர்க ளியற்றியது.

சகவீர வம்பலனு கிவந் தோன்கண் மணிகுகன்மேற்

சகவீர வின்சுவைச் சொன்மாசி லாமணி மாலைசாற்றுஞ்

உகவீர நண்புதாக் கூண்டியெப் யன்பர்க் குளங்குலவச்
செகவீர பாண்டியன் சீர்சாலறிஞர் சிகாமணியே.

சேலம்ஜில்லா வாணியம்பாடி ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
ஸ்ரீமாந். அரங்கசாமி ஐயங்காரவர்களியற்றியன.

வட்டநத்த மரைமலர்கள் வதனமென மலர்வாவி வனப்பு
வாய்ந்த, வொட்டநத்தத் தலகோர்க ளுவப்படைய வுதித்
திட்டோ னுவந்து நூல்கள், முட்டநத்த மறக்கற்றோன்
முதல்வனடி முளரிகொழுன் முதன்மை யென்று, கட்ட
நத்தங் கழுன்றிடுமா கவிநதிமை கடவுளுக்கே களித்த ளிப்
போன். (1)

மாசிலா மணிமாலை திருமேனி மலர்மகள்கோன் மரு
கோனை,காசிலா மணிமாலைக் கவின்மாடத் திருச்செந்திற்
கந்தர் மீது,தேசிலா மணிமாலை செறிநூலாய் செகவீர பாண்
டியன்சீர், மாசிலா மணிமாலை யெனவொருநூன் மகிழ்ந்
துலகுக் கீந்தான் மாதோ. (2)

பொன்மயபுரம் மகா-ள-ள-ஸ்ரீ
நாகப்பநாயுடு அவர்களியற்றியது.

மணிமாலைப் பிறைசேர்செஞ் சடைக்கடவுள் பாக
மயின் மாமை பீற, மணிமாலை வனக்கொடிச்சி மகன்மரு
குன் அனைவனை மயில்வீரற்கே, மணிமாலை மருக்கரு

ளின் னமுதெனப்பா வலர்கொளச்சீர் மணிமா சில்லா, மணி மாலை வளைந்தானற் செகவீர பாண்டியநா வலவன் மன்னே.

தூத்துக்குடி சற்சனசபைக் காரியதரிசி
**மகா-ள-ள-ஸ்ரீ சங்கரலிங்கப்பிள்ளை யவர்கள்**
இயற்றியன.

யாருண்புங் கேணிப்போற் செலமுடை யானென்றிவ் வகில மெல்லாம், நாருண்ட சிந்தையொடு மகிழ்ந்துநவி றரக் குணங்க ளன்று வாய்ந்தோன், காருமதி சாபித்திடவே பிர சங்க மாரிபொழி கவிஞர் வேந்தன், சீருண்ட திறல்வடி வேற் செவ்வேளை யப்பதமே சிந்தை வைத்தோன். (1)

அருளாசை கொண்டுகவி யாறுமுகன் றுட்கு தரைக்கு மணவன் போலப், பொருளாசை கொண்டோர் பதினெழுவ கவிபுகலப் புனிதன் போல, மருளாசை யிலையாதான் செக வீர பாண்டியனெம் வள்ளலீந்த, தெருளாசை தருமிந்த மாசிலா மணிமாலை சென்னி வைப்பாம். (2)

சாற்றுக்கவிகள் முற்றும்.

---



உ

சிவமயம்

சண்முகக்கடவுள் துணை.

# மாசிலாமணி மாலை.



காப்பு

தேசு லாவிய செந்திற் பதிதிகழ்
பாச நீங்கு பரமன் பதத்தினின்
மாசி லாமணி மாலை வனைந்திட
வீச னீன்ற விபந்தனை யேத்துவாம்.

முருகக்கடவுள் துதி.

குமர வேளிரு குலமல ரடியுளத்
தமர வேள்சம னைமரு மகனுமே.

நூல்.

கடம்பணி யுரமும் பன்னிரு கரமுங் கனகமா முடிகளோ ராறுங், குடம்புனை யிலைவே லருளிலை கொழிக்குந் தாமரை விழிகளீ ராறும், படம்புரி தோகை மயிலினிடைக் கண்டு கைக்குகைக் குருகுனா ளுனாதேதா, மடப்படா மனத்தோர் பரவுறுஞ் செந்தில் வள்ளமேல மாசிலா மணியே. (1)

கண்டுசர்க் கரையின் பாகொடு கலந்து காய்ச்சிப்பின் வடித்ததெள் ளமுதே,அண்டர்மா முனிவர் தேடருங் கனியே யாதியே யனகமே யறிவே, தொண்டர்பான் மேவுஞ் சோதியே துதிப்போர் துயரிருட் கெழுந்தகு ரியனே மண்டுநீம் புனல்சூழ் செந்திலம் பதிவாழ் வள்ளலே மாசிலா மணியே. (2)

கண்ணினுண் மணியே கருத்துறு மதியே கட்டுமா வின்றனிக் கனியே, தண்ணறுஞ் சாந்தே யதிலுறு மணமே தத்துவங் கடந்ததற் பரமே, பெண்ணொடா ணலியா யருவுரு வாகிப் பிறங்கிய பிரமமே பவள, வண்ண மாமலையே செந்திலம் பதிவாழ் வள்ளலே மாசிலா மணியே.

அறிவளா ரெல்லா முடையரே யெல்லா முடையரா யினுமறி வில்லார், எறிதிரை சுலவு நிலமிசை யொன்று மிலரென மொழிந்தனர் புலவர், வறிதுரை பகரா வாக்குநின் பெருமை மதிக்குநல் லறிவுமெற் கருளாய், மறியினற் பிணையோ டுபத்தையு மணைந்த வள்ளலே மாசிலா மணியே.

கன்னலி லெழுந்த கனிந்ததீஞ் சாறே காய்ச்சிய பாலினற் சுவையே, யுன்னரும் பொருளே யுரைப்பரு நிதியே பூரணமி றேனுவே தருவே, யின்னறீ ருளத்தி லெழுந்தமா மதியே யிணையறு தவத்திறோ ருளத்தில், மன்னிய ஞான பானுவே செந்தில் வள்ளலே மாசிலா மணியே. (5)

தந்தையுந் தாயுந் தாரமுந் தமருஞ் சற்குரு நாதனுந் தனையேர், மைந்தனுந் தானு நீயெனப் பெரியோர் வந்து நின்னருட்பத மடைந்தார், எந்தையே சிறியே னியானெனதெனக்கொண் டிடர்க்கடற் படிந்தன னினிநீ, வந்து தாட் புணைதந் தருளுக செந்தில் வள்ளலை மாசிலா மணியே. (6)

பாவமும் பழியும் பகுத்தறி யாத பாதகர் நாடருந் திருவே, நாவக மிருந்து கற்கவி யருளு நண்ணருந் தெய்வ நாவலனே, காவக மலர்ந்த கான்மலர் நிறைந்த களிச்சுரும் பணுகுறுந் தேனே, மாவகிர் பொருகட் குர்ப்பிடி மணந்த வள்ளலே மாசிலா மணியே. (7)

வாயினு னூல்கள் பலபடித் துணர்ந்து மற்றையோருளங்கொள மொழிந்தும், பேயனு ரடங்காப் பேதையோரென்ற பெரியர்சொற் கிலக்கிய மானேன், வீயினால் வென்றி கொளவரு மதனை வென்றவன் றந்தவேள் விமலா, மாயனார் மருகா வரதனே செந்தில் வள்ளலே மாசிலா மணியே. (8)

கண்டுசொல் பயந்தேன் பாகென மொழிந்து காரிகையார்கண்மேன் மையல், கொண்டுமத் துழக்கத் தயிர்படும் பாடாய்க் கொடியனே னுளமுடைந் தவர்க்குத், தொண்டுகள் புரிந்த தெத்தனை கோடி சொல்லயார் வல்லவ ரரசே, வண்டுழு கடம்பு மணிப்புயத் திலங்கும் வள்ளலே மாசிலா மணியே. (9)

அப்பினி னூற்ற வப்பென வடியே னகங்கரைந் தன்பு
கொண் டுனது, செப்பருங் கமல மலரடி சேரத் திருவரு
ளளித்திடு வானாய், முப்புர மெரித்த முக்கணன் புதல்வா
மூடிக வாகனன் றுணைவா, மைப்புனை வாட்கண் மலைமகள்
மகனே வள்ளலே மாசிலா மணியே. (10)

சந்தத முனது திருவடி போற்றுச் சமூகத்தே னுனக்
கிடை யிருக்கச், சங்கரா வின்று மியல்பிலே யெனினுஞ்
சொல்லுமா மறைமுத லெல்லையும், எந்தைநு ரணைனென்
றிசைத்தகற் கிலா மாதலா லிருந்தருள் புரிவாய்,வந்தனங்
கோடி தந்தன னடியேன் வள்ளலே மாசிலா மணியே. (11)

பாவலர் போற்றுந் திருவருட் பரிசில் பாலிக்கும் பரம
தாதாவே, காவலர் போற்றுங் கனகமே கடையேன் கருத்
தினுங் கிசைந்திடுங் கனியே, கோவலர்க் கிரங்கிக் கொண்ட
லைத் தடுத்த கொண்டல்வண் ணற்கெழின் மருகா, மாவ
லர் தொடுமேவான் பணிவடி வழகா வள்ளலே மாசிலா மணி
யே. (12)

இன்னுமோ ரன்னை கருப்பையிற் புகுதா தெனியனை
யாண்டருள் புரியாய், சொன்னநான் மறையு மம்மறைச்
சிரமுந் தொடர்ந்திடாத் தூயநற் சோதி, அன்னமுங் குயிலு
மயில்களுங் குலவு மணிபொழிற் செந்திலம் பதிவாழ், மன்
னனே யெனது மனமல ருகந்த வள்ளலே மாசிலா மணி
யே. (13)

பாடுமென் வாய்பற் பலகவி யெனினும் பாவியே னுளமொருக் காலும், வாடினைந் துருகா விச்செய லதற்கென் மலரயன் வகுத்தன னம்மா, தேடுதற் கரிய தெய்வமா மணியே தீவினை யிருட்கொரு சுடரே, மாடவிக் குலஞ்சூழ் வண்கடம் பணியும் வள்ளலே மாசிலா மணியே (14)

மைந்தனைத் தந்தை யழைத்தவன் குதலை வாய்மொழி கேட்பது போலச், சிந்தையுற் றழைத்துன் றிருவடி யிருத்தி யியலிசை கூத்தெனச் செப்புஞ், செந்தமிழ் மூன்றுந் தந்துநின் கருணை செறியுநா வளித்தனை யாளாய், வந்துகார் தவழும் பொழில்வளர் செந்தில் வள்ளலே மாசிலா மணியே.

யாக்கைகா ரணரா மன்னைதந் தையரை யன்புடன் பணிபவ ரடையும், பாக்கிய மெய்மாற் பகரொணா தென்னும் பழமறை யுடன்முத லவைக்குந், தேக்குகா ரணநீற் போற்றுந ரடையுந் திறத்தினை யுரைக்கவல் லவரார், மாக்குரா லாக வள்ளிமா தவனே வள்ளலே மாசிலா மணியே.()

எண்ணிலா நூல்கள் படித்துணர்ந் தாலு மிறைவனை நினதுபொற் பாதங், கண்ணிலா ரந்தோ கண்ணிலார் கல்விப் பயனுறுக் கடையரு மவரே, வெண்ணிலா வணிந்த வேணியற் கொருசொல் விளம்பிய வேதநா யகனே, மண்ணுறு முழவங் குளிர்திருச் செந்தில் வள்ளலே மாசிலா மணியே, (17)

மலமலி யிந்தச் சடப்புழுக் கூட்டில் வருத்திடேல் வருத்தனை யாயிற், கொலைமலி வேற்கைக் குருபரா நினது குரைகழ லனுதினம் பரவ, நலமலி யன்பொன் றளித் தருள் புரிதி நண்ணுதற் கரியதற் பரமே, வலமலி யவுணர் பதிதனை யழித்த வள்ளலே மாசிலா மணியே. (18)

இரவிமுன் னிமம்போ லேழையேன் வினையா மிமங் கெட வெழுந்தசெஞ் சுடரே,நாவரி யுவந்த ஞானகே சரியே நாவலர் போற்றுபொற் குன்றே, காவிலார் பரவுங் கருணை யங் கடலே கண்ணுதற் கரும்பருண் முத்தே, வரைபக வெறிந்த மானவே லேந்தும் வள்ளலே மாசிலா மணியே(19)

எத்தனை சனன மெடுக்கினு மவற்று ளின்பமே துன்ப மொன் றில்லை, சுத்தனே சுரர்க டொழும்பதம் யானுந் தொழப்பெறு தலா லெனது, சித்தமே குடிகொண் டருள் புரி தேவ சின்மயா தீமைசே ரிதய, மத்தருக் கெட்டா வாலிப வழகே வள்ளலே மாசிலா மணியே. (20)

பத்தியோ ரணுவு மகத்திலாப் பாவி பட்டிமைத் தொழில்களே புரியும், புத்தியி லசடன் புலன்வழி யொழு கும் புன்மையே னுய்யுமா றுளதோ, வுத்தம குணத்தோ ருளத்தொளிர் ஞான வுதயனே முடியிடை நதியும், மத்தமு மதியும் வைத்தவ னளித்த வள்ளலே மாசிலா மணியே.(21)

பரிபடை வீணை வாணிபெண் புருடர் பாரினி லடைந் தவர் குணமே, பெரிதுறப் பெறுவ ரென்று நூல் வல்லோர் பேசுவர் பெண்மையோர் பாகத், தொருபர னருளுங் குரு பரா வதனு னுன்னடி யாரினஞ் சேர்த்தாள்,மரகத மணியி னொளிதிகழ் மயிலூர் வள்ளலே மாசிலா மணியே. (22)

அரிதுமா னிடராய் வருதல்வந் தாலு மாண்மக னாய் வர லரிது, சரதமார் நூல்கள் பலபடித் துணர்தல் சாலவு மரிதுமற் றதிலும், பெரிதரி துனது மலரடி போற்றல் பேதையே னதுபெற வருளாய், வரிவளைத் தரள நிலவுமிழ் செந்தில் வள்ளலே மாசிலா மணியே. (23)

பொன்பல தரினு மகிழ்ந்திடேன் மயல்சேர் பூவை மார் போகமு மகிழேன்,என்புநெக் குருகி யிருவிழி களினு மிருந்துநீ ருவட்டெடுத் தொழுக, வன்புநின் றிறத்தி லளித்திடின் மகிழ்வே னன்னையே யையனே யரசே, மன் பதை வாழ்த்தச் செந்திலம் பதிவாழ் வள்ளலே மாசிலா மணியே. (24)

என்றுவா னவர்கள் பகைதொலைத் தளித்த வேந்தலை யின்றிரு வடிமேற், கன்றுதாய்ப் பிரிந்த தென்னவே கத றிக் கசிந்துகண் ணீர்சொரிந் தழுது, நன்றுநீ யுற்ற வென் னையேபோ லுருகத் தொழும்பனேற் கன்பளிப் பதுவே, மன்றுணின் றடிஞ் சோதியி லுதித்த வள்ளலே மாசிலா மணியே. (25)

யானென தென்னுஞ் செருக்கினை யகன்று மெய்த்தவர் முத்தியாந் தலமென், றாணையி றெய்வப் புலமைவள் ளுவனு ருரைத்தனர் மெய்க்கரு வுணர்ந்தும், ஈனமார் மனத்தோ டிருவினைச் சார்பு மெய்தினே னென்றுநா னுய்வேன், மான் மக வொடுங்குஞ் செந்தியில் விளங்கும் வள்ளலே மாசிலா மணியே. (26)

பாதகக் கோடி புரியினுந் தாயர் பாலனை யுளம்வெறுத் தகற்றார், ஏதகங் கொண்ட சிறியனேன் றனக்குத் தெய்வ மா தாவுனை யன்றி, யாதர வுளதோ யான்செயும் பிழைக ளனைத்தையும் பொறுப்பதுன் கடனே, மாதவர் போகம் பயிறிருச் செந்தில் வள்ளலே மாசிலா மணியே. (27)

நசையெனுங் கயிற்று ளூனத்தினைப் பிணித்து நன்மனை யெனுந் தறிமாட்டி, வசைபுரி மாத ரெனுங்கொலை வேடர் மக்களா நாய்களை விடுத்துத், தசையினைப் பிடுங்கித் தின நடுங் காதுன் றண்மலர்த் தாடரு ளரசே, மசகமின் மனத்து மாதவர் பணியும் வள்ளலே மாசிலா மணியே. (28)

வெண்ணெய்தன் கரத்தி லிருக்கவுங் கிருதம் விழைந் துழல் பேதைய ரொப்ப, அண்ணனீ யென்றன் மனத்தி னிற் குடிகொண் டருளின்வீற் றிருக்கவு நின்னைக், கண்ணால் சேப்யாது கதிபெற மார்க்கங் கருதினோர் தலைத்தனன் கடையேன், மண்ணால்செய் மணிப்பூ ணணிந்தருள் சேயே வள்ளலே மாசிலா மணியே. (29)

என்னையுந் தொண்டா வெடுத்தது கமலத் தெழினலங் கவற்றிய வுண்டு, பொன்னடிப் போதின் பெருமையை மற் றோர் புந்தியா லறிந்துநற் கதியின், மன்னுதற் பொருட்டோ வல்லது பித்தன் மகனெனுஞ் செயலெரித்திடவோ, வன்னி கர் தனத்துக் கொடிச்சியோ டமரும் வள்ளலே மாசிலா மணியே. (30)

முன்னமே புரிந்த முழுத்தவப் பயனோ முதல்வநின் திருவரு ளாலோ, பன்னகா பரணன் சடைத்தலைக் கிடந்த பாவையின் முகத்தினிற் றீட்டு, நன்னய மேவு திலகம்போல் விலகு நத்திருச் செந்திலம் பதிக்கோ, மன்னயா னின்னை வழுத்துதற் கேது வள்ளலே மாசிலா மணியே. (31)

அருமறை யுடனே யாகம புராண மாதியா வுளகலை யாவும், ஒருமுறை பரவி யுணர்தரு ளடைந்தோர்க் குணர்ந் திடற் கரியவாங் கொல்லோ, இருமறை யிறைவ ருளங் கொள மொழிந்த வெங்கைநின் னடைக்கல மடியேன், வரு மிறை வானோர்க் கொழித்தசே வகனே வள்ளலே மாசிலா மணியே. (32)

நானமும் புழுகுங் கமழ்தருங் குழலார் நயனமாம் வாளிபட் டெனது, மானமுந் தவமுங் கல்வியு மறிவும் வன்மையு மொழுக்கமும் வனப்புந், தானமுந் திருவுந் தழு விடைப் பட்ட சருகென வழிவுறா தருள்வாய், வானமும் பூ நீர் வளியன லுறும் வள்ளலே மாசிலா மணியே. (33)

பத்தரை மாற்றுப் பசும்பொன்னு லிழைத்த பணிகளை யணிந்துபட் டுடுத்தே, யித்தரை முழுது மொருகுடை நிழலி லிருந்திட வரசு செய்தாலும், முத்தரை முத்தித் தலத்திடை யிருத்து முதல்வநின் பதம்பணி யாரேன், மத்த ரென் றறிவோ ரிழித்தவர்ப் பாரார் வள்ளலே மாசிலா மணியே. (34)

வேலையில் வேலே வைத்துமுன் பசுமை விரிபொலங் கிரி முடி நடுங்கக், கோலமார் செங்கை கொண்டபொற் செண்டாற் கொட்டியிம் மாநிலம் புரந்த, பாலனே பதியே பகாரு நிதியே பண்ணவர் தேடருங் கதியே, மாலேயேப் மஞ்சி அரிஞ்சிசூழ் செந்தில் வள்ளலே மாசிலா மணியே. (35)

ஐயனே யரசே யன்னேயே யருளே யன்பருக் கின்பமே நல்கும், தய்பனே தூயர் தொழுந்தவக் கொழுந்தே சொன்னமா மறைப்பொருட் பயனே, மெய்யனே வெளியே விமலனே விதிக்கும் விதியினுக் கோர்பெரு விதியே, மைதவழ் சந்த வரையுறு செந்தில் வள்ளலே மாசிலா மணியே.

சீலமே சிவமே தெள்ளிய நறவே யங்கற வெழுந்தசெஞ் சுவையே, ஏலவார் குழலா ரறுவர்பூண் முலைப்பா லினிதுற வுண்டருள் புரிந்த, கோலமே நிறைந்த குணப்பெருங் கடலே குறைவிலா வின்பமே கொன்றை, மாலையோ னளித்த மதலையே செந்தில் வள்ளலே மாசிலா மணியே. (37)

மலத்திடைப் புழுத்த புழுவினுங் கடையா மதியிலே னையுந்திரு வருளால், நலத்திடை யீர்த்துன் திருப்புகழ் பேச நாவலி யளித்தநிற் கெளியேன், குலத்தொடு மடிமை யாவதே யன்றிக் கொடுப்பன யாவுள வரசே, வலத்திடத் திபமு மருணமும் பொருந்தும் வள்ளலே மாசிலா மணியே.

ஆசையாம் பாச மடித்திட மயங்கி யறிவிலாப் படு குழி வீழ்ந்து, காசையே தேடக் கருதியே விருதா கச டரைப் புகழ்ந்துபின் சென்று, சிசிபோ போவென் றவ ரிகழ்ந் தேசச் சிந்தைநொந் தயர்ந்திடா தெனையாள், மாசி லா வளங்க ணிறைதிருச் செந்தில் வள்ளலே மாசிலா மணி யே. (39)

அருட்பெருங் கடலே யக்கட லெழுந்த வரியவா ன ந்தவின் னமுதே, மருட்கடல் கடத்து மாதவப் புணையே மறுவில்வீ டுதவுகற் பகமே, யிருட்கட லடங்தோ ருளத் திடை யெழுந்த வினையறு சோதியே யென்னைத், தெருட்டி யாட் கொண்ட செய்யவே லரசே தெய்வமே மாசிலா மணி யே. (40)

கற்றவன் கற்ற படிநடந் திடலே கடனஃ தவனிட மிலையேல், பெற்றநற் கல்விப் பயனொரு போதும் பெற்றி டான் பேதையென் றிகழ்வார், நற்றவ ரதனாற் கற்றல்போ னடையு நாயினேற் கருள்புரிந் தாளாய், மற்றலை மலர்ந்த வெற்றிவே லேந்தும் வள்ளலே மாசிலா மணியே. (41)

கடக்கரும் விதியைக் கடத்தலுங் கூடுங் கருதருநா
ற்கடல் கடந்து, கிடந்திடன் முடியைத் தெரிதலுங் கூடுஞ்
சிந்தையைப் புலன்வழிச் செல்லா, தடக்கிவீட் டின்ப ம
டைதலுங் கூடு மையநின் னருள்சிறி தடைந்தால், வடத்
தடி யோகத் திருந்தவ னளித்த வள்ளலே மாசிலா மணியே.

பெற்றதாய் நீயே பிள்ளையா னிதனிற் பேதமோர் சிறி
துமின் றென்னிற், கற்றநா வலர்கள் களித்துணைக் களிக்க
கட்டுமா வின்றணிக் கனியே, நற்றவம் புரியா நாயினுங்
கடையே னாயினு நல்லரு டந்து, மற்றெனைப் புரத்த னின்
கட னன்றோ வள்ளலே மாசிலா மணியே. (43)

பவளமால் வரைமேற் படர்ந்தொளி விளங்கு பசிய
கோமளக்கொடி தன்னிற், கவளமால் களிற்றுக் கனியின்
சிற்ப் பழுத்துக் கதிர்நிக ழருட்பெருங் கனியே, தவளமா
மதியி லெழுந்ததண் ணமுதே தண்ணமு தத்தெழுஞ் சுவை
யே, மவுனமே மவுன நிலையுறு நிலையே வள்ளலே மாசிலா
மணியே. (44)

கோபமு மதமுங் கொலையுமே பயிலுங் குலத்திடைப்
பிறந்துளோர் தமையும், பாபமும் பழியு மகன்றுநன்
மேன்மை பழுத்தநற் குடிப்பிறந் தோரும், பூபதி யென்
னப் போற்றிட வைக்கும் புண்ணியா விண்ணவர்க் கரசே,
மாபலா வாழை மலிதிருச் செந்தில் வள்ளலே மாசிலா
மணியே. (45)

வேசரி மலரின் வாசமோர்ந் திடுமோ வீணர்கள் வினை கிகளுடைய, மாசறு குணத்தின் மகிமையோர் குவரோ மல மது நாகர்கருங் கேழல், தேசுறு தேமாங் கனிச்சுவை தன் னைத் தேறுமோ சிதடர்க ளினது, வாசமென் மலர்த்தாள் வழுத்தவல் லவரோ வள்ளலே மாசிலா மணியே. (46)

மனமெனும் பெரிய பேய்வசப் பட்டு மயங்கியையம் புலன்வழி யோடிக், கனமெனுங் குழலார் கண்ணெனும் வலையிற் கட்டுண்டு கிடந்தன னந்தோ, வனசனே யருள் சே ரையனே யனையே யப்பிணி யவிழ்த்தெனை யாளாய், வனசமார் வாவி மலிதரு செந்தில் வள்ளலே மாசிலா மணி யே. (47)

நீரிடைக் குளிருந் தீயிடைச் சூடு நிலத்திடை வலியு மாய் நின்றாய், போரிடை யவுணர் குலமடி யோடும் பொன் றிட வெற்றிவே லெடுத்தாய், தாரிடைச் சுரும்பர் பாண் செயப் பரிசி றந்துதேன் குலவிய தோளாய், வாரிடைத் தனத்தர் மயறவிர்த் தெனையாள் வள்ளலே மாசிலா மணியே.

எந்தவே ளையினு நின்பதம் பொருந்து மியன்மிகு மனமுநின் புகழே, சந்ததம் புகலத் தக்கதோர் வாக்குந் தண்ணளி நிறைந்தநின் னடியே, வந்தனை புரிந்து வழிபடு தனுவும் வாய்த்திட வெனக்கருள் புரியாய், மந்தமா வதனத் தொருமூதற் கிளைய வள்ளலே மாசிலா மணியே. (49)

ஒளிக்கொளி யளிக்கு மொள்ளொளிப் பிழம்பே யுயிர்க்குயி ராய்த்திகழுணர்வே, யளிக்குல நுகரத் தேனுறு வளிக்கு மம்புயத் திருந்தவன் முதலோர், களித்திடத் தோன்றுங் காமர்நன் னிதியே கரையிலாக் கருணையங் கடலே, வளைக்குல மெடுத்துத் திரைமெறி செந்தில் வள்ளலே மாசிலா மணியே. (50)

மலருறு மணமே மதியுறு கலையே வானமே வானெலாங் கடந்த, புலனுமுற் றறிவே யறிவினை விளக்கும் போதமே போற்றிசெ யமரர், தலையுறு மகுட கோடிக ளுழுத தழும்புறு தாமரைத் தாண்மும், மலமற வென்றன் மனத்தினுட் பதித்தாள் வள்ளலே மாசிலா மணியே. (51)

ஆல்முமருதா வார்க்கருள் புரிந்த வண்ணலா ருவந்தினி தளித்த, வேலமர் தடக்கை விமலனே யமலா வின்னவ ரல்லலைத் தீர்த்த, பாலனே பதியே பரவுபே ரின்பம் பழுத்தெழு முத்தியாந் தருவே, வாவிய வறங்க ணிறைதிருச் செந்தில் வள்ளலே மாசிலா மணியே. (52)

நாவினு லுனது திருவடி போற்று நாயினுங் கடையனேற் கருளிப், பூவிலால் வாளி தொடுபவன் றுயரம் புந்தியி லணுகுற தகற்றிக், தூவிமா மலர்க டொழுதுனைப் பொருந்தும் தூயமா மனமளித் தாளாய், வாவிகள் புடைசூழ் செந்திலம் பதிவாழ் வள்ளலே மாசிலா மணியே. (53)

மாங்கனி முதன்முக் கனிகளைப் பிழிந்து வடித்தெடுத் தட்டபா னறுநெய், தாங்கலந் தினிய கண்டுதேன் சீனி சருக்கரைப் பாலொடு சேர்த்துத், தேங்கனிந் தொழுகு கட்டி போ லன்பர் சிந்தையி லினித்ததென் னமுதே, வாங்குவின் மதனை யெரித்ததே வளித்த வள்ளலே மாசிலா மணியே.

என்னுளத் திருந்த வின்பசா கரமே யிமயமா மலையி டைப் பிறந்த, கன்னியாமுமைதன் கரதலத் தமர்ந்து கனி ந்தமென் மழலையை வழங்கி, மன்னியே முநியா வளர்முலை யமுதுண் மதலையே மாலய னறியா, வன்னிமா மலையா மரு னருள் சேயே வள்ளலே மாசிலா மணியே. (55)

மனமொரு கணமு மென்வய மின்றி மயக்கமார் புலன் வழி யோடிச், சினமுத லியவாந் தீமையே புரியுந் தீயவரோடு நட் பாகித், தினமெனை வருத்து மிதற்கியான் முன்செய் தீவினையாதுகொ லறியேன், வனமலை வாழ்க்கைக் கொடிச்சி யா தரங்கொள் வள்ளலே மாசிலா மணியே. (56)

பத்தியா னினது பாததா மரைமேற் பண்ணுடன் பாடி யிவ் வுலக, மித்தையென் றறிந்தே யதில் வெறுப் புற்று மேற்கதிக் கானநற் செயலே, முத்தர்கள் புரிந்தார் மூட னேன் மாதர் முயக்கமே முத்தியென் றந்தோ, மத்துறு தயிரி னுளமிக வுடைந்தேன் வள்ளலே மாசிலா மணியே.()

கல்வியா லாய நற்பயனினது கமலமென் மலரடி பணி
யும், நல்வினை யொன்றே யலதிலை யென்று நவின்றனர்
நன்மொழிப் புலவர், சொல்வினைக் கொடியே னதுகடைப்
பிடித்துன் றுணையடி பரவிடா தந்தோ, வல்வினை வாட்ட
வந்துனை யடைந்தேன் வள்ளலே மாசிலா மணியே. (58)

என்னைநற் றவங்கள் செய்தன னடியே னிமையவர்க்
கரியநின் னிருதாள், மன்னியென் னகத்தி லிருந்தருள்
புரிய வைத்ததற் கினியமான் மகளா, மன்னையுங் கடவு
ளியானையும் போற்று மையனே யாதியா ரணங்கள், வன்
னியுங் குயிலும் பயிறிருச் செந்தில் வள்ளலே மாசிலா
மணியே. (59)

சிந்தையை நிறுத்தி யோரிடத் திருந்து தேவநின்
னருள்பெற வேண்டின், நிந்தையே மேவு நீசனேன் மன
மோ நிலைபெறா தகன்றகன் றுவா, விந்தையா வோடிக் குதி
த்துவின் டாவி வியனில முழுவதுஞ் சூழ்ந்தும், வந்திடா
தென்று லென்றுநா னுய்வேன் வள்ளலே மாசிலா மணியே.

எழுத்துரை பொருளோ டியாப்பலங்கார மென்னுமை
வகையிய லான, பழுத்தநற் புலமை பாவியேற் களித்துப்
பாததா மரைமலர் மீது, முழுத்தவ ரேத்து முறைமை
போ லெனையு முதல்வநின் றிருவரு ளாலே, வழுத்திட
வைத்தல் பாரமோ புகலாய்-வள்ளலே மாசிலா மணியே, ()

அம்மவோ கொடுமை யாற்றுதற் கரிதே யையனே யபயநிற் கபயம், இம்மையே பழியும் பாவமும் பெருக்கி யிடர்ப்பெருங் கடலிடை வீழ்த்தும், வெம்மைசேர் மனத் தோ டிருந்திட முடியா வினையினாற் கொடியனே னெனி னும், மம்மர்கோ யகற்றி யென்னையாண் டருள்வாய் வள் ளலே மாசிலா மணியே. (62)

செந்நிலம் பதியி லுவந்தினி திருந்து சிவகோ டிகட் கருள் புரிய, மெந்தையே யடியே னின்னுயிர்க் குயிரே யிணையிலாத் தெய்வமா மணியே, சுந்தரா வைவர் நாதனு புரகத் துசனுமைச் சென்றமான் மருகா, வந்துவந் தென்று மாதவர் போற்றும் வள்ளலே மாசிலா மணியே. (63)

வாயுன தினிய நாமமே புகல மனமுன தலர்ந்தசெங் கமலத், தூயமா மலரி னடிகளே யுள்ளத் துணைவிழி யுனைத் தெரி சிக்கக், காயமுன் னடிமைத் தொழில்களே புரியக் கா துன தரும்புகழ் கேட்க, மாயமார் மனத்தேற் கருள்புரிந் தாள்வாய் வள்ளலே மாசிலா மணியே. (64)

மனப்பெருங் கொடுமை வழுத்திட முடியா வாயினாற் கலைத்திறம் பலகொண், டினித்தநல் வசன மியம்பிமற் றவ ரை யிணங்கிடச் செய்வதே யன்றித், தினைத்துணை யேனுந் தானடங் காமற் றீவினை யியற்றியெப் பொழுதும், வனத் துறு வங்கி யெனத்துய ருறுத்தும் வள்ளலே மாசிலா மணியே. (65)

பத்தியாற் சித்தஞ் சுத்தியா மதனாற் பரமநன் ஞான மா மதனாற், சித்தியா முத்தி யென்றுமுன் மொழிந்தார் தெள்ளியோ ராதலா லரிய, முத்தியை யடைதற் கேதுநற் பத்தி முற்பட வினிதென வறிந்து, மத்தமின் மனத்தோர் வந்துனைப் பணிவார் வள்ளலே மாசிலா மணியே. (66)

இப்பெருங் கொடிய மனத்துடன் கூடி யிருப்பதி லெல்லையில் காலம், அப்பறுங் கொடிய வழலுறு பாலை யணுகியங் கிருத்தலே நலமாஞ், செப்பரும் புகழே திகழ் நவ மணியே தேடருஞ் செம்பொனே சிவமே, வைப் பொரு வடிவே லேந்துசெங் கரனே வள்ளலே மாசிலா மணியே. (67)

இச்சைகூர் வடிவத் துடனெழுந் தென்னை யின்னல் செய் மனத்தினை நினது, செச்சையந் தொடையல ணிந்த ருள் கொழிக்குந் திருவடிக் கமலமென் மலராற், கொச்சை யை யகற்றி யாண்டருள் பரம குமரசற் குருபரா குருதி, வைச்சமர் நுதிவேன் மலர்க்கரத் தேந்தும் வள்ளலே மாசிலா மணியே. (68)

அடக்கமென் றுரைக்கு மருங்குண மொருவ னகத்தி டை யிலையெனி லவன்முன், றிடத்தொடு கற்ற கல்வியா லுற்ற சிறந்தநற் குணமெலா மறந்து, விடக்குறுங் கடினா யெனவறி வோர்கள் வெறுப்பரா லெந்தையே வினைகூர்,

மடக்கடை யேற்கவ் வடக்கமே யளித்தாள் வள்ளலே மாசிலா மணியே. (69)

கல்லுமோர் காலத் துருகுமே யந்தோ கல்லினுங் கடிய தாய்க் கொடிய, வல்லிரும் பாகி யென்றுமே யுருகா மனத் தினை னுய்யுநா ளுளதோ, முல்லையம் போதைப் பழித்த வெண் மூரன் முகிழ்முலைப் பவளவாய்ப் பசிய, வல்லியங் கொடிமேற் படர்ந்தபூந் தருவே வள்ளலே மாசிலா மணி யே. (70)

முன்னமோர் மெய்ம்மைப் புலவனைப் பூத முன்னவன் பூசையிற் பிழைத்தா, னென்னவே யெடுத்துக் கிரிக்குகை செறிக்க வெந்தைநின் பதமலர் மீதி, லின்னிசை யாற்றுப் படையெனும் பனுவ லியம்பிட வின்னறீர்த் தாண்டோய், மன்னுமா தவனுக் கொருகுரு பரனே வள்ளலே மாசிலா மணியே. (71)

மகபதி வானோர் மலரயன் முதலோர் மலர்க்கரங் குவி யவு மவர்தம், முகமலர் விரிந்து பொலியவு மெழுந்த மொய் கதிர்ப் பரிதிவா னவனே, குகவர குமர குமரகுருபன் முருக குருபர வென்றுனைப் பரவும், வகைபுரிந் தெனையுங் காத் தருள் புரிவாய் வள்ளலே மாசிலா மணியே. (72)

முத்தமிழ்க் கடலு முவரிநீர்க் கடலு முதுமறைக் கடலையு முண்ட, வித்தக முனிவற் கொருகுரு பரனுய் விள

ங்கிய ஞானதே சிகனே, சித்துரு வாகி யெழுந்தசின் மயனே தெண்கட லெழுந்தமுதெள் ளமுதே, வத்திரந் திசையா வைத்தவன் வணங்கும் வள்ளலே மாசிலா மணியே.

தந்தைநீ தாய்நீ தமரொடு மக்க டாரமு நீயென மொழிய, வந்தநீ யன்றி மனமொருங் காறு மலரடி நினைந்துனைந் தலறி, எந்தையே யுருகி நின்றில னென்று மேழையே னுய்யுமா றுளதோ, மந்திர மறைகள் புகழ் திருச் செந்தில் வள்ளலே மாசிலா மணியே. (74)

இயன்மிகு தரளக் கவியர சருளா லெழின்மிகு கவிகளை யமைக்குஞ், செயலினை யளித்துச் சிறுமையைத் தொலைத்துத் தீவினை யணுகுறா வண்ணம், புயலென வருளை பொழிவிழி நோக்கம் புரிந்துபொற் கழறலை சூட்டி, மயலையுந் தவிர்த்து வலிந்தெனை யாண்ட வள்ளலே மாசிலா மணியே. (75)

பான்மணங் கமழுங் குமுதமென் செவ்வாய் பசிய மென் மழலையை வழங்கக், கான்மலர் மறைநூ புரவொலி வழங்கக் கண்மலர் கருணையை வழங்க, வான்மணிக் குடையா மதிமுக முவகை வழங்கநல் லிமையமா மலைப் பொன், மான்மணி மலர்க்கை யேந்திமுத் தாடும் வள்ளலே மாசிலா மணியே. (76)

சேவிடை வருதே வருளிய குமரா செங்கைவே
லிலங்கிய வமலா, தீவிடு மெழுகே போலென தாளமுன்
செய்யகற் றிருவடிக் கமலப், பூவிடை யுருகா மென்மயிர்
பொடியா புன்கணீர் பொழிதரா வந்தோ, வாவுறுங்
கொடிய விம்மன மருளாய் வள்ளலே மாசிலா மணியே. ()

அன்பெனும் புணைமீ தேறிநின் னினிய வருள்வழி
யேகினு லன்றித், துன்புறும் பிறவிப் பெருங்கட னீந்தித்
துகளறு முத்தியாந் தலத்தை, யின்புட னடைத லரிதென
மறையே யியம்பினவ் வன்பதொன் றில்லா, வன்பெரும்
புலையே னெங்ஙன முய்வேன் வள்ளலே மாசிலா மணியே.

பிறைதவழ் வேணிப் பெருமனு மிமையப் பிறங்கலிற்
பிறந்திசை விளக்கு, மிறைவியுங் கரியா னனத்தனுஞ் சங்க
மேந்திய மாலுநான் முகனும், நறைமலர்த் தாமம் புனைமக
வானு நாகரு நரருமற் றியாவும், மறைமுனி வரரு மகிழ்ந்
திட வெழுந்த வள்ளலே மாசிலா மணியே. (79)

மனம்வசப் படுமேல் வானமும் பூவு மலரய னுலகமுந்
திருமா, லுனலரும் பதமு மொருங்குகைக் கொண்ட வுத்த
மச் செல்வராய் வாழ்வார், பினையஃ திலேயேற் கல்வியு மறி
வும் பெருமையுங் குறைந்துபே தையராய், வனிதையர்
மோகக் கடற்படிந் தழிவார் வள்ளலே மாசிலா மணியே. ()

வாய்மையாக் தகழி தனிற்பொறை யென்னு மாசறு திரியினை யிட்டுத், தூய்மைசேர் தவமா நெய்யதி னிறைத்துச் சொல்லரு மருள்விளக் கேற்றித், தீமையஞ் ஞான விருட்பி ழம் பொழிந்தோர் சிந்தையி லிலகுமெய்த் தேவே, மாமை யார் தெய்வப் பிடி தனக் கினிய வள்ளலே மாசிலாமணியே.

கருணையங் கடலே கதிதரு பதியே கண்ணுதற் றீங் கரும் புயிர்த்த, வருள்பொழி முத்தே யமலமே யறிவே யாதியே யம்பிகை தந்த, தெருண்மிகு மணியே யெனது கண் மணியே தேவர்க டேவனே தெய்வ, மருமல ரடி யென் னுளத்தினிற் பதித்த வள்ளலே மாசிலா மணியே.

என்னுயிர்க் குயிரே யிமையவர்க் கரசே யேகனே யேதமொன் றருமல், மன்னுயிர் புரப்ப வந்தவான் மணியே மலைமகள் குமுதவாய் மலரால், இன்னுயிர்க் குதலை மதலையே யென்று வேந்திமுத் தாடுறு மமுதே, வன்னகந் தகடு கீண்டவே லேந்தும் வள்ளலே மாசிலா மணியே. (83)

பன்னக வேந்தன் பரித்தபார் தனிலுற் பவித்தவர் பாசவெம்பிறவி, யின்னறீர்ந் தமல வீட்டினை யடைதற்கிறை முறை வகுத்தவா றன்றி, முன்னமோர் வதுவை யெனமொ ழிந் தாங்கு முந்தினோர் தமையெலாங் கதியின், மன்னுறச் செய்த மாதவப் பயனே வள்ளலே மாசிலாமணியே. (84)

தன்னகந் தன்னின் மூர்க்கனு மூருட் டனமிகப் படைத்திருப் பவனும், பன்னுதன் றேசந் தன்னிலே வேந்தும் பாவல ரெவ்விடங் களினு, முன்னிய பூசை பெறுவர்நின் னன்பர் முருகவி ழம்புயா தனத்தே, மன் னிய விதியும் வழுத்துறப் பெறுவர் வள்ளலே மாசிலா மணியே. (85)

அன்னையே யரசே யையனே யருளே யாரணு பூரணு வமலா, கன்னலின் பாகே பாகினுட் சுவையே கட்டுமா வின்கனிச் சாறே, யென்னையாண் டவனே யெனதுகண் மணியே யிறைவனே யென்னரு நிதியே, மன்னிய சைவக் கொழுந்துறு மணமே வள்ளலே மாசிலா மணியே. (86)

பாசவெம் பிறவி யெறிந்தெனை நுளத்திற் பங்கய மலரடி வைத்த, வீசனே வாச மலர்க்கடம் பணியு மிறை வனே மறைமுடி யதனில், வாசமுற் றிலங்கும் வரதனே சரதர் மனங்குடி கொண்டொளிர் விளக்கே, மாசறு கலைக ணிறைமதி யமுதே வள்ளலே மாசிலா மணியே. (87)

இந்திர தனுவான் மினல்புனற் குமிழி யென்னவே தோன்றிநின் றிமைப்பில், நைந்தொழி மெய்யை மெய் யெனக் கருதி நாள்பல கழித்தன னவமே, மந்திரின் குருவை யொத்திலே னபயம் வந்தெனை யாண்டரு ளரசே, வந்திகள் புகழுஞ் செந்திலம் பதிவாழ் வள்ளலே மாசிலா மணியே.

அன்னையை நோக்கி யென்னை நீ காவென் றறைந்திடா திருப்பினு மன்னை, வன்னியா ரிழுதை யெனமனங் குழைந்து மைந்தனைப் பரிவுட னேந்தி, இன்னமுதூட்டுமாபோல வெந்தையே யின்னுயிர்க் குயிராய், மன்னிய பரனை யென்னையாண் டருளாய் வள்ளலே மாசிலா மணியே. (89)

அப்புப மலரா தனத்திருப் பவனு மன்னவன் றந்தை யுங் காணு, வெம்பிரான் றனக்கு மொருகுரு பரனு யிலங்கிய ஞானபீத சிகனே, தும்பிமா முகவன் றுணைவனே வென் றழைக்கும் சுந்தரா தாமரை முடியார், வம்பறு மலர்த்தா ளென்னுளம் வைத்தாள் வள்ளலே மாசிலா மணியே. (90)

அந்தமு நடுவு மாதியு மின்றி யகிலகா ரணப்பரம் பொருளாய், முந்தநான் மறையி னருஞ்சிரத் திலங்கு முழுமுதற் கடவுளே முந்நீர், சந்தத மொலிசெய் சென்நிலம் பதிவாழ் தற்பரா சிற்பரா தமியேன், வந்தனைக் கிரங்கி யாண்டரு டெய்வ வள்ளலே மாசிலா மணியே. (91)

பழவினை யெறிந்தே யெனையறி யாமற் பங்கயத் திருவடி வைத்த, குழகனே குகனே குருபரா குமரா கோலமா மயிலிடைத் திகழு, மழகனே யமுதே யமலனே யறிவே யடியனின் னடைக்கல மரனே, மழகளிற் றிறைவந் தனுதினம் பரவும் வள்ளலே மாசிலா மணியே. (92)

தந்தையே தாயே தனிப்பரம் பொருளே தாவில்வீ
டுதவுகற் பகமே, யந்தமி லின்பே யறுமுகத் தெய்வ
வமுதமே யகிலகா ரணமே, முந்தைவான் பொருளே
மொழிமனங் கடந்த முத்தியே வித்திலா முதலே, மந்தமா
வினஞ்சார் சந்தன சலம்வாழ் வள்ளலே மாசிலா மணியே.

எல்லையில் லாத ஞானமே ஞானத் தெழுந்ததா
ரிணையிலா வின்பே, யல்வினை நிகர்க்கு மாணவ மாதி
யானமுக் குற்றமு மகற்றிக், கல்லினுங் கடிய மனக்கொடி
யேனைக் கருணையா லாள்வதுன் கடனே, மல்வளஞ்
செறிந்த பழனமார் செந்தில் வள்ளலே மாசிலா மணியே

திருவளர் சலச மலருறு மணமே யம்மலர் நிறைந்த
செந்தேனே, குருவளர் மணியே யம்மணி யொளியே
கோதறு தெய்வவா னமுதே, கருவளர் பிறவிப் பிணிக்
கொரு மருந்தே கடையனே னுளங்குடி கொண்ட, மரு
வளர் கடப்ப மாலிகை தரித்த வள்ளலே மாசிலா மணியே.

பெருந்தவ முடைக்கும் பேதையர் காமக் கலவியே
பெரிதெனப் பேயன், அருந்தவம் புரியா தவத்திலே கால-
மனைத்தையுங் கழித்திடா தருளாய், முருந்துவல் வனச
மூரலன் கொங்கை முகமெனத் திகழ்தரு தெவ்வ, மருந்தன
வள்ளிக் கொடிபடர் மலையே வள்ளலே மாசிலா மணியே.

குளத்திடை யொருகண் ணுடையவ னளித்த குணப் பெருங் குன்றமே கொடியேன், உளத்திடை முளைத்த தனிச்சிவக் கொழுந்தே யுணர்வரும் பேரின்ப வுருவே, பளத்திடைப் பாரி னீரென நினது பணிமல ரடிக்கன்பென் றருள்வாய், வளத்திடை யமுதன் மயிற்பரி கடவும் வள்ளலே, மாசிலா மணியே. (97)

கடியகால் வீசு நெடியபாழ் வெளியிற் காட்டிய தீபிகை கடுக்குங், கொடியனேன் மனக்கோ டரம்புலக் காட்டிற் குட்புகா தருள்புரிக் தாளாய், நெடியமால் விதியா கண்டல னேத்த நிகரில்சூ ரன்குல முழுதும், மடியவேல் விடுத்த வடியருள் ளொளியே வள்ளலே மாசிலா மணியே.

பருதிபோன் மிளிர்வே லுறைதிருக் கரமும் பணிமதிக் குவமையா முகமும், மருமலர் நீப மாலைசே ருரமும் வனசமேய் விழிகளு மான்றேல், தருதிரு வனையார் திகழ்வரைப் புயமுந் தண்டையந் தாள்களுங் கண்டு, மருளறுங் காலமென்றுகொல் செந்தில் வள்ளலே மாசிலா மணியே. (99)

செந்திலே லென் றொருகா னெறியிடைச் செல்வோர் செப்பினுந் தீயுறு மெழுகிற், சிந்தைநைந் துருகி மென்மயிர் பொடித்துச் செம்மொழி குழறிமெய் நடுங்கி, யுந்திமென் புனலிற் கண்கணீர் துளித்துள் ளுணர்வழி யன்பர்க ளிற்ப, வந்தெனை யாண்டாய் யான்செய்மா தவமென் வள்ளலே மாசிலா மணியே. (100)

பலகலை யுணர்ந்து பொருள்விரித் துரைத்துப் பாவலர்க் கரசரா யிந்தத், தலமெலாம் போற்ற வீற்றிருப் பவருந் தண்ணளி சிறிதடைந் தவரே, கலமெலா மளித்தென் னையெலாந் துடைத்த நாதனை வேதனைக் குட்டி, வலமறீச் சிறையில் வைத்தருள் புரிந்த வள்ளலே மாசிலா மணியே. (101)

எட்டியின் கனியே யேழைய ரின்ப மெனவறிந் தறிவுளோர் துறந்தார், வட்டிகை பூட்டு தனத்தியர் மோக வலையிடை பதியிலார் சிக்கிப், பட்டபா டந்தோ கண்டுநான் பயந்தேன் பகர்வதேன் பரமனே கண்பார், மட்டுறு மலர்ப்பூஞ் சோலைசூழ் செந்தில் வள்ளலே மாசிலா மணியே. ()

விணர்கள் புகழ வேசையர் மகிழ மெய்யினை யலங்கரித் தவர்கள், காணவே நடிப்பாக் கண்களை யிமைத்துக் கைகளை நீட்டியே பேசி, மாணவர் வெறுத்து நாணுறுஞ் செயல்செய் மடையர்பான் மருவிடா தாளாய், வாணியுந் திருவு மகிழ்ந்துறை செந்தில் வள்ளலே மாசிலா மணியே. (103)

மின்னொளி மான வேலொளி துலங்க விரிபசுங் கதிரென மயிலின், றன்னொளி யலங்கச் செங்கதிர் போலத் தயங்கிய மணிமகு டத்தின், பொன்னொளி யிலங்க வமுதருள் கொழித்துப் பொலிதரு திருமுக மதியின், மன்னொளி விளங்க வந்தருள் செந்தில் வள்ளலே மாசிலாமணியே. ()

3

பன்னெடுங் காலம் வனமலை யிருந்து பாசடை சருகுநீ ரருந்தி, வன்னியிற் கொடிய மனத்தினை யடக்கி மாசறு தவப்புரிந் தறவோர், அன்னையே யரசே யையனே யென்று னருளடைந் தமலவீ டுற்றார், மன்னுறு மனத்தே னிப்புகா லென்றோ வள்ளலே மாசிலா மணியே. (105)

மூலமு நடுவு மந்தமு மின்றி மூவகைக் காலமுங் கடந்த காலனைக் காய்ந்த காலனார் பாலக் கண்ணினின் றெழுந்த செங் கதிரே, தாலமே லுடையோன் றுங்கிய மலரே சத்திவே லங்கையி லேந்தி, மாலயன் முதலோர் மனமிடர் களைந்த வள்ளலே மாசிலா மணியே. (106)

காசலா நதியு பிறழியுங் கலையுங் கலந்தொளிர் செஞ் சடைப் பெருமான், தேசலா மணித்தோ ளிவர்ந்தக மகிழ் ந்தே திருவிளை யாடல்செய் காலைப், பாசிழை யுமையாள் மலர்க்கர மேந்திப் பாலவா வாவெனப் பாய்ந்து, மாசிலா னந்தந் தந்தருள் சேயே வள்ளலே மாசிலா மணியே (107)

முத்தமிழ்த் துறையு மயக்கற வுணர்ந்து முருகவிழ் மலரடி மீதிற், பத்தியாய்ப் புனைந்து வனைந்தபா வலர்தம் பாவணி மாலைபோற் றமியேன், சித்தமீ தெழுந்த நசையினால் வனைந்த சிறியவிம் மாலையு மணிந்தென், மத்தமு மகற்றி யாண்டருள் செந்தில் வள்ளலே மாசிலா மணியே. ()

மாசிலா மணி மாலை முற்றிற்று.



உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்.

# திருச்செந்திற் கந்த பதிகம்.

நாதமணி நதியேறு திருவேணி முடியாதி நாதனருள் சோதியேமுன், னைமுக வசுரனுடல் கூறுபடவேபொருத நாயகனருட்டுணைவனே; பாதிமதி நுதலம்பி கைக்கினிய பாலனே பாவலர்க ளநுகூலனே, பண்ணவர்க ளின்னலற மின்னயிற் படையசுரர் பட்டொழிய விட்டபரனே; நீதி நெறி யேகுமறி வாளர்திரு வுள்ளமே நின்றிலங் கருணி சிவமே, நித்தமே சுத்தமே புத்தமுத மேயன்பர் நேயமே தூய சுகமே; சிதமுறு மானந்த வாரியே நின்கருணை தேக்கித் திளைப்ப தென்றோ, செந்திநக ரன்பாது சிந்தைமறை யந்தமுறை சிந்தைமகிழ் கந்தமணியே. (I)

பொன்னுடை மணியணி புனைந்துலக முழுதும் புரக்கின்ற புவியின்பமும், போகமலி கற்பகப் பொற்றருவிலமர்தரும் பொன்னுலக வாழ்வின்பமும்; முன்னுமல ராதனத் தேவினுய ரின்பொடு முராரியின் பழம்விடுத்துன்,

முளரியந் திருவடிப் போதிலெழு கின்றதனி மோனவா
னந்தவெள்ளம்; மன்னுகலை மதியோர்கண் மூழ்கிக் களிக்
கவே மதியிலை யின்னுமிந்த, மண்ணிலுறு மின்பமே
மெய்யென மகிழ்ந்துனது மலரடி மறந்தனன்றோ; தென்
னன்மக ளாகியுல கேழுமர சாடல்புரி செல்வியருள் செல்வ
மேநம், செந்திநக ரன்பரது சிந்தைமறை யந்தமுறை
சிந்தைமகிழ் கந்தமணியே. (2)

போதமுறு கற்பகப் பூஞ்சோலை யேயெனது புந்தி
தனி லூறுகின்ற, புத்தமுத மேயாணி முத்தமே யவியாத
பூரணப் புதுவிளக்கே; கோதிலா தொளிர்ஞான பானுவே
வானமே குறையாத கலைமதிய மே, கொல்லாத மாதவர்க
ளுள்ளமே கோயிலாக் கொண்டிலங் கருணிதியமே; வேத
முடி மீதிலகு சோதிமணி யேயென்று மெய்க்குழைந் தழ
லின்மெழுகாய், விம்மலுற் றேங்கியழு துள்ளநெக் குருகி
மண் வீழ்ந்தவச மாகி நினது; சீதமல ரடியிலெழு மானந்த
வெள்ளந் திளைப்பதெக் காலமருளாய், செந்திநக ரன்பரது
சிந்தைமறை யந்தமுறை சிந்தைமகிழ் கந்தமணியே. (3)

பொன்னுண்டு புவியுண்டு பூவையர்க ளுண்டினிய
புதல்வரொடு மனைகளுண்டு, போற்றுபரி வாரங்க ளுண்
டிரத கஜதுரக புயபல பதாதியுண்டு; மின்னுண்ட பொன்
மணிப் பூண்களுண் டவிர்கனக மேயுபட் டாடையுண்டு,

மேதக்க கல்வியொடு கேள்வியுண் டறிவுண்டு மிக்கதிட முண்டு மாரன்; பின்னுண்டு போகவெழின் மேனியுண் டெவரினும் பெருமையுண் டெனமகிழ்ந்து, பேர்பெற்ற முடிமன்னர் வாழ்வெலா மண்ணுண்டு பேருமழி வுற்ற தன்றோ; தென்னுண்ட மணநீப மாலையணி பாலநின் றிரு வரு ளளித்தாளுவாய், செந்திநக ரன்பரது சிந்தைமறை யந்தமுறை சிந்தைமகிழ் கந்தமணியே. (4)

மாருதச் சூழலுறு பூளையென வாசையெனும் வன் சண்ட மாருதத்தால், மனநிலை குலைந்துவெங் காமவட வனலினின் மருகியைம் புலவேடரா; லோருதவி யின்றியுழ லேழையரி னன்னவர்க் கூழியம் புரியாதுநின், னுபயதிரு வடிமலரி லெழுபிரச முண்டுண் டுளங்களித் திடவருளுவாய்; காருதவு மின்னிடையெ னன்னையர்க ளிருபுடை கலந்திலகு ஞானவொளியே, கருதுநல் லன்பருக் கின்பமே நல்கருட் கற்பகத் தேவதருவே; சீருதவு சிந்தாம ணிப்பிழம் பே யெனது செல்வமே கல்விமுதலே, செந்திநக ரன்பரது சிந்தைமறை யந்தமுறை சிந்தைமகிழ் கந்தமணியே. (5)

சீறியெதி ரேறிவரு சமனொடும் போரினைச் செய்தவனை வெற்றிபெறுவன், சிம்மமேற் கொண்டெனது சிந்தையின் படியதைச் செல்லவச மாக்கிவிடுவன்; வீறுபெறு குலகிரிக ளெட்டையுஞ் சென்றென விநோதமா விட்டாடுவன்,

வேலையை யகட்டினிலடக்கிவட வனலையும் யேன்மூச்சி னலை விப்பன்; வேறுபல வும்புரிவ னென்னுமதி வல்லவரும் மின்னார்கண் மோகவலையில், வீக்குண்டு போக்கின்றி நிலை குலைந் தழிவரேல் விமலநின் னருளன்றியே; தேறலின் சொன்மாதர் காமவெங் கனலினைச் சிந்தையி லவிக்கவலரோ, செந்திநக ரன்பரா சிந்தைமறை யந்தமுறை சிந்தைமகிழ் கந்தமணியே. (6)

கல்லாத பேரினுங் கடையராய் மடையராய்க் கருணைமொழி சிறிதுமிலராய்க், கடுமொழிய ராய்வஞ்ச நெஞ்சராய்க் கோபராய்க் கர்வமே பெரிதுடையராய்ப்; பொல்லாத செயல்களே புரிகின்ற புலையராய்ப் பொய்களவு கொலையாளராய்ப், போதமொரு சிறிதேனு மின்றியறி யாமையே பூரித்த வுளமுடையராய்ச்; சல்லாப லீலைபுரி மின்னார்களின்பமே சாசுபத முத்தியென்று, தாமதகு ணத்தின்வசமாகியுழல் பேதையர்கள் சார்புசா ராமல்வேறு; செல்லாமலெனதுள்ள மோனநிலை பெற்றிடத் திருவருட் செல்வமருள்வாய், செந்திநக ரன்பரா சிந்தைமறை யந்தமுறை சிந்தைமகிழ் கந்தமணியே. (7)

மறைமுதற் கலைபலவு மோதினு மும்பெரிய மணிமந்த்ர மாதியான, வரமுறுஞ் சித்திபல கற்றாலு முற்றவிம் மாநிலமெ லாம்புரக்குஞ்; குறைவறும் பெருவாழ்வு பெற்

ரூனு நற்றவக் குணமொருங் குற்றுனுமின், குறைகழற் கன்புசெய் துன்கிருபை பெற்றுளக் கோடரம டக்கிமறுவில்; நிறைமதி யெனச்சாந்த முற்றலையில் புணரிகா ணேராத நீப மெனவே, நிலைபெற்ற யோகமெய்ஞ் ஞானிகட் கல்லதுயர் நீர்நிசய வின்பமுறு மோ; சிறைமயிற் கிறைவனே கறைய யிற் கொருவனே சிந்தா மணிக்குவியலே, செந்திநக ரன்பரது சிந்தைமறை யந்தமுறை சிந்தைமகிழ் கந்த மணியே. (8)

வாய்மைபொரு ளொருதெய்வ மணிவிளக் கென்விதய மனையகத் தேற்றி நசையாம், வாதமனு காமனுயர் மாதவமெ னுங்கிருதம் வற்றமலே நிறைத்துத்; தீமையந் ஞானமாம் வல்லிரு ளகற்றியருள் சேராத காமாதிகள், திரி க்கிட்டு நெஞ்சக் குடிக்கொட கின்னருட் செவ்வே லெடுத்து மாட்டித்; தூய்மைபொறை சாந்தமரு ளன்பறிவு சீலமாஞ் சுதுணைவரி யணையிலுறது, தொல்லைமறை முடிவினுறை செல்வமல ரடிகண்டு தொண்டனேன் மகிழ்வதென்றோ; செய்மையா யண்மையா யுயிரினுக் குயிரதாய்த் திகழ்கின்ற ஞானவொளியே, செந்திநக ரன்பரது சிந்தைமறை யந்த முறை சிந்தைமகிழ் கந்தமணியே. (9)

சங்கற்ப மேமனதின் வடிவமா தலினைதைத் தகையின் மன நிற்குமென்னிற், சமுசார வாரியின் கரையேறி ஞலது

சங்கற்ப நீங்கலறிதா; விங்கற்ப மானவிச் சமுசார வாரிநின்
றேறுதற் குபாயமேதென், றெண்ணிலுன் றிருவடிக் கமல
மாம் புணையன்றி யெவ்விதத் தாலுமிலதே; பொங்கற்பு
தச்சோதி யாயிலகு தெய்வமே போதமே போதநல்கும்,
புத்தமுத மேயெனது சித்தமே குடிகொண்ட புனிதமே
பொருவில்பொருளே; செங்கற்ப கக்காவி லெழுகின்ற போக
நகர் தேவர்கடொழும்பாதனே, செந்திநக ரன்பரது சிந்தை
மறை யந்தமுறை சிந்தைமகிழ் கந்தமணியே. (10)

கந்த பதிக முற்றிற்று.

---



# திருச்செந்தூர் முருகப்பிரான் மீது போற்றிமாலை.

கந்தனே போற்றி யாண்ட கருணையங் கடலே போற்றி
யந்திவா ணிறத்தாய் போற்றி யறுமுகக் கனியே போற்றி
செந்திபி லமர்ந்தாய் போற்றி சேவலங் கொடியாய் போற்றி
சந்தமா மயிலோய் போற்றி சரவண பவனே போற்றி. (1)

தண்டையங் தாளாய் போற்றி சண்முக முடையாய் போற்றி, கொண்டன்மான் மருகா போற்றி குமாரநா யகனே போற்றி, யண்டர்கள் தலைவா போற்றி யருட்கட லமுதே போற்றி, தொண்டர்க டுயர்தீர்த் தாளுஞ் சோதியே போற்றி போற்றி. (2)

ஏகநா யகனே போற்றி யெங்குல நாதா போற்றி வாகைவே லவனே போற்றி வள்ளிமா தவனே போற்றி யாகுவா கனன்பின் வந்த வற்புதத் திருவே போற்றி தோகைமே லிலங்கி யென்னைத் தொண்டுகொண் டாள்வாய் போற்றி. (3)

தாருக னோடு சூரைத் தடிந்தவேற் கரனே போற்றி
வேரியங் கடம்பாய் போற்றி வேதநா யகனே போற்றி
கூருகிர்ப் புலித்தோல் பூண்ட கோவருள் குழகா போற்றி
தார்புனை புயனே போற்றி தண்ணரு ளமுதே போற்றி. ()

செம்பொன்மா மலையே போற்றி செழுஞ்சுடர் மணியே போற்றி, யெம்பெரு மானே போற்றி யெண்ணிய தருவாய் போற்றி, யம்புயா தனனைக் குட்டி யருஞ்சிறை யடைத்தாய் போற்றி, கும்பமா முனிக்கு ஞானங் கொடுத்தருள் குரவா போற்றி. (5)

கண்ணிரு மணியே போற்றி கருத்துறு கனியே போற்றி, யுண்ணிறை யுணர்வே போற்றி யுரைப்பரும் பொருளே போற்றி, தண்ணிய வமுதே போற்றி சங்கரி தனயா போற்றி, புண்ணிய ருளமே பூத்த பூங்கனித் தருவே போற்றி. (6)

குருமணி விளக்கே போற்றி குகேசவே லவனே போற்றி, செருமலி யவுணர்ச் செற்றுத் தேவரை யளித்தாய் போற்றி, கருவளர் பிறவி யென்னுங் கடும்பிணி மருந்தே போற்றி, யருமலர்ப் பாத மென்மேல் வைத்தருள் வரதா போற்றி. (7)

எண்ணுதற் கெட்டா நின்ற வின்பவா ரிதியே போற்றி
புண்ணிய முதலே போற்றி பொங்கருட் புனிதா போற்றி
பண்ணுறை சுகமே போற்றி பாவல ரரசே போற்றி
கண்ணுதற் சாமி தந்த கடவுளே போற்றி போற்றி. (8)

ஐயனே போற்றி யென்னை யளித்தரு ளையே போற்றி
துய்யனே போற்றி சொன்ன சுருதிநா யகனே போற்றி
செய்யனே போற்றி யார திருமூலை யுண்டாய் போற்றி
பொய்யுடை யோர்கள் காணாப் பூரணா போற்றி போற்றி.()

குழகனே குகனே போற்றி குமாரசற் குருவே போற்றி, யழகனே யறிவே போற்றி யாநிகா யகனே போற்றி, கழிபெருங் கருணை நோக்காற் கடையனை யாண்டாய் போற்றி, மழகளி றளித்த தேவ மங்கைதன் மணாளா போற்றி.

சந்தனு சலந்நிற் சிவ சாட்சியாய் நின்றாய் போற்றி, சுந்தரா போற்றி சைவர் தொழுந்தவக் கொழுந்தே போற்றி, முந்தைவா னவர்கள் போற்ற முரண்பகை தொலைத் தாய் போற்றி, யந்தமா திகளில் லானை யப்பனு வுடையாய் போற்றி. (11)

பன்னிரு தோளாய் போற்றி பங்கயத் தாளாய் போற்றி
முன்னொரு புலவ னுற்ற மொய்சிறை தவிர்த்தாய் போற்றி
கன்னல்வின் மதனும் பெண்மை காமுறு மழகா போற்றி
யென்வினை தவிர்த்தாய் போற்றி யிணையில்பே ரின்பே போற்றி.] (12)

மன்றுணின் ருடல் செய்யும் வள்ளல்பால் வந்தாய் போற்றி, குன்றுநோ ருடல் செய்யுங் குணப்பெருங் குன்றே போற்றி, வன்றிறற் சூர்பின் வந்த மடங்கலை வதைத்தாய் போற்றி, வென்றியே திகழும் வேற்கை விசாகனே போற்றி போற்றி. (13)

அருவமு முருவு மாகி யநாதியாய் நின்றாய் போற்றி, முருகனென் றோர்பேர் கொண்டு முளைத்தசெங் கரும்பே போற்றி, பொருகயற் கண்ணி கொஞ்சும் பொற்புறு கிளியே போற்றி, வரகவி யருண வள்ளல் வண்புக ழணிந்தாய் போற்றி. (14)

சென்னியின் மகுட மாறுந் திகழ்தரு தேவே போற்றி, கன்னியக் குறமா னுக்காக் கானவ னானாய் போற்றி, மன்னவ னாகிச் செங்கோல் செலுத்திய சேயே போற்றி பொன்னணி கமல பாதம் பொருந்தவைத் தாள்வாய் போற்றி. (15)

மருவிரி கடப்ப மாலை மலர்புயத் தழகா போற்றி, கருவிடை யெனைக்க லந்து காத்தபே ரொளியே போற்றி, பொருவரு புலவா போற்றி பூரணப் பொருளே போற்றி, தருநிழ லுறைய வானோர் தம்மையாண் டளித்தாய் போற்றி. (16)

செங்கைவே லேந்தி யன்பர் தீவினை சிதைத்தாய் போற்றி
மங்கையோர் பாகம் வைத்த வரனருண் மணியே போற்றி
யங்கையின் மேவி நின்ற வழிவிலா வமுதே போற்றி
செங்கழ லென்மேல் வைத்த தேவனே போற்றி போற்றி.

சச்சிதா னந்த மான தனிப்பரஞ் சுடரே போற்றி
யுச்சிமேற் புலவர் கொள்ளு மொளிர்மணி முடியே போற்றி, பச்சைமான் முதல வானோர் பயந்தொலைத் தளித்தாய் போற்றி, கொச்சையேன் றனையு மாண்ட குமரவேள் போற்றி போற்றி. (18)

மாதவ ருளத்தாய் போற்றி மாதுமை மைந்தா போற்றி
வேதனைச் சிறையில் வைத்த வேதநா யகனே போற்றி
பூதவான் படைக ளோடு போந்துசூர்ப் பொடித்தாய் போற்றி, போதமில் சிறிய னேற்கும் பூங்கழ றந்தாய் போற்றி. (19)

அத்தியை யரிவை யாக வாக்கிய வரசே போற்றி
பத்திசா லன்பர் போற்றும் பாவணி பரனே போற்றி
முத்தின மலைகள் வீசி முரல்செந்தி முதலே போற்றி
மந்திர தயிரி னுள்ள மருகுரு தான்வாய் போற்றி. (20)

சண்முக மணியே போற்றி சரவண பவனே போற்றி
தண்முக வருளே போற்றி சந்தனன் மார்பா போற்றி
பண்முகத் தெழுந்த வின்பம் பதிதரு பயனே போற்றி
திண்முக மடங்கன் மாய்த்த சிப்புனை போற்றி போற்றி. ( )

செம்முக மாறு கொண்டு தேவர்க்கா வந்தாய் போற்றி
மைம்முகன் றனக்கு மோர்சொ லருள்குரு பரனே போற்றி
தம்முனை யானை யாகத் துணிவரச் செய்தாய் போற்றி
மைம்மலி பொழில்சூழ் செந்தில் வள்ளலே போற்றி போற்றி

நின்மலா போற்றி யன்பர் நேயனே நிதியே போற்றி,
கன்மனக் கள்வர்க் கெட்டாக் காமரோண் கனியே போற்றி,
பொன்மலர்ப் புனிதப் பைந்தாட் பொருந்தவெற் கருள்வாய்
போற்றி, சொன்மனங் கடந்து நின்ற சுயஞ்செழுஞ் சுடரே
போற்றி. (23)

பொன்னில மாதராசை பொருந்திடா தாள்வாய் போற்றி
பின்னிலங் கான வீரன் றனக்கறி வருள்வாய் போற்றி
முன்னிலங் கன்பர்க் குற்ற மொய்வினை தவிர்ப்பாய் போற்றி
சொன்னலங் கனிந்த தூயோர் கொழுந்தவக் கொழுந்தே
போற்றி. (24)

தவப்பெருங் கடலே போற்றி சதுர்மறைப் பொருளே
போற்றி, பவப்பெரும் பவத்தில் வீழா தன்பரைக் காப்பாய்
போற்றி, புவப்புற வானோர் வேந்த னைவிரயி லெடுத்தாய்
போற்றி, சிவப்புறு புளினச் செந்தி னின்றரு ளெங்காய்
போற்றி. (25)

சோதியே சுடரே போற்றி தோகைவா கனனே போற்றி
யாதியே யறிவே போற்றி யகிலகா ரணனே போற்றி
நீதியி னிலையே போற்றி நித்தனே நிமலா போற்றி
கோதிலாக் குணத்தோ ருள்ளங் கோயிலாக் கொண்டாய்
போற்றி. (26)

தந்தையுந் தாயு மாகித் தமியனை யாண்டாய் போற்றி
விந்தமா மலையை வென்ற மெய்த்தவன் கண்ணே போற்றி
யிந்தன நுதல்வேற் கண்ணா ரிழிமய ருலைத்தாய் போற்றி
கொந்துலாங் குழற்சூர்க் கும்பி குலவிய குன்றே போற்றி

ஐயனே யரசே போற்றி யன்பருள் ளமுதே போற்றி [ற்றி
பொய்யனேன் புன்மை யெல்லாம் போக்கிய புனிதா போ
துய்யநான் மறையி னந்தந் துலங்கிய சுடரே போற்றி
கையிலம் மானை யேந்துங் கண்ணுதன் மதலாய் போற்றி. ()

கோயிலாக் கொடியே னுள்ளங் கொண்டசெந் தேனே போற்றி, தாயிலாக் குழவி போலச் சரவணைத் தமர்ந்தாய் போற்றி, வேயிலாக் கியதோட் டெய்வ விளம்பிடி விருந்தே போற்றி, சேயிலார் கொடிக ளாடுஞ் செந்திலந் தேவே போற்றி. (29)

ஆக்கமு மறிவு மன்பு மளித்தெனை யாள்வாய் போற்றி
வாக்கொடு மனமுஞ் சொல்ல மதித்திடற் கரியாய் போற்றி
மாக்குரன் மதமா வியானை வழிவந்த மணியே போற்றி
கோக்குல வடிவேற் செங்கைக் குருபரா போற்றி போற்றி.

போற்றிமாலை முற்றிற்று.

